


# சத்திய தூதன்.

Vol. VI. No. 3. JANUARY, 1893. [Price 1 Pie Monthly.

## THE SACRED BOOKS OF THE BIBLE.

The Bible is divided into two parts—the Old and New Testaments. The Old Testament is the religious book of one of the oldest people in the world—the Jews. The New Testament tells of Jesus Christ. It is the fulfilment and completion of the Old.

But the question may arise, Is the Bible now as it was when first written? In the year 1488 the *printing* of books was first invented. We know that the Bible now is printed substantially as it was at that time. There are still in the library at Oxford (in England) one copy of the Old Testament printed in Hebrew, and several copies of the New Testament printed in Greek. These copies were printed from Hebrew and Greek books which had previously been *written.* Many of these manuscripts are still preserved.

Moreover other ancient writers have made many quotations from the Holy Scriptures, in their own writings. There are so many of these that if the New Testament were lost, it might be again written from the quotations made from it by these writers. The Scriptures have also been translated at various times into many of the old languages, and 285 years, B. C. the Old Testament was translated into Greek.

Hence it appears by the above facts that the Old Testament existed 285 years, B. C., that the New Testament existed in the first century after Christ, and that there is no difference between the Bible of that time and the Bible of our time.

*The Old Testament.*—These books are of very unequal age, some being as ancient as the time of Moses (3500 years old) and some not written till after the Jews, return from Babylon (2500 years old). The compilation was revered as the Word of God not only by Jews generally, but also by Christ and His apostles. Hence to Christians also it is the Word of the living God. A further guarantee for the authenticity of this Old Testament for the last 1800 years is supplied by the circumstance that Jews and Gentiles, two independent and rival parties, have acted as its guardians. Their mutual jealousy has been a sufficient check against any change in the writings. Under such strict and un-

## சத்திய வேதாகமங்கள்.

சத்திய வேதமானது பழைய ஏற்பாடென்றும், புதிய ஏற்பாடென்றும் இரண்டு பாகங்களாயிருக்கிறது. பழைய ஏற்பாடானது அதிபூர்வ சனமாகிய யூதர்களின் ,வேதபுஸ்தகம். புதிய ஏற்பாடானது இயேசுகிறிஸ்துவைப்பற்றியது; அது பழைய ஏற்பாட்டை நிறைவேற்றிப் பூரணப்படுத்துகின்றது.

ஆனல் சத்திய வேதமானது ஆதியில் இயற்றிய பிரகாரமே நாளதுவரையும் இருக்கிறதோ என்று சிலர் கேட்பார்கள். 1488–ம் வருஷத்திலே புஸ்தகங்களை அச்சிடும் விதத்தை கண்டுபிடிக்கப்பட்டது. இதுகாரணத்தினலே இப்பொழுதுண்டான சத்திய வேதமானது அப்பொழுது அச்சிட்டபடியே இருக்கிறதென்று நாம் அறிந்துகொள்ளலாம். இங்கிலாந்தைச் சேர்ந்த ஆக்ஸ்பார்ட் நகரத்தில் அப்பொழுது எபிரெய பாஷையில் அச்சிட்ட பழைய ஏற்பாட்டுப் பிரதி ஒன்றும், கிரேக்கபாஷையில் அச்சிட்ட புதிய ஏற்பாட்டுப் பிரதிகள் சிலதும் இதுவரையும் பத்திரப்படுத்தப்பட்டிருக்கிறது. இதுகள் அதற்கு முன்னே கையெழுத்துப் பிரதிகளாயிருந்த எபிரெயு கிரேக்குப்பாஷை வேதாகமங்களிலிருந்து அச்சிடலாயின. இந்தக் கையெழுத்துப் பிரதிகளில் அனேகம் இந்நாள்வரையும் காப்பாற்றப்பட்டிருக்கின்றன.

இதன்றி பூர்வ நூலாசிரியர்கள் தாங்கள் இயற்றிய கிரந்தங்களிலே சத்தியவேதாகமங்களிலிருந்து அனேக வசனங்களை எடுத்துரைத்திருக்கிறார்கள். புதிய ஏற்பாடு முழுவதும் காணமற்போனலும், அதை இந்த நூலாசிரியர்கள் எடுத்துரைத்த பாகங்களைக்கொண்டு மறுபடியும் குறையற எழுதிவிடலாம். அன்றியும், பற்பல காலங்களில் இவ்வேதாகமங்கள் பற்பல பாஷைகளிலே மொழிபெயர்க்கப்பட்டன. கிறிஸ்து பிறக்க 285 வருஷத்துக்குமுன்னே பழைய ஏற்பாட்டைக் கிரேக்க பாஷையிலே திருப்பினர்கள்.

மேற்கண்ட விஷயங்களினல் பழைய ஏற்பாடானது கிறிஸ்துவுக்குமுன் 285–ம் வருஷத்தில் உண்டாயிருந்ததென்றும், புதிய ஏற்பாடானது கிறிஸ்துவுக்குப்பின் முதலாம் நூற்றாண்டில் உண்டாயிருந்ததென்றும் திருஷ்டாந்தமாகிறதுமன்றி, அக்காலத்து வேதாகமங்களுக்கும் இக்காலத்து வேதாகமங்களுக்கும் யாதொரு பேதம் இல்லை என்றும் விசதமாகிறது.

**பழைய ஏற்பாடு.**—இதின் ஆகமங்கள் எல்லாம் ஒரே வயதுள்ளவை அல்ல; சில மோசேயின்காலத்தில் 3500 வருஷத்துக்குமுன் எழுதப்பட்டவை; சில யூதர்கள் பபிலோனை விட்டுத் திரும்பிவந்த காலமாகிய 2500 வருஷத்துக்குமுன் எழுதப்பட்டவை. இந்த ஆகமங்கள் யூதர்களால் மாத்திரமல்ல, கிறிஸ்துவாலும் அவருடைய அப்போஸ்தலராலும் தெய்வத் திருவாக்காக மதிக்கப்பட்டன. ஆதலால் கிறிஸ்தவர்களுக்கும் இப்பழைய ஏற்பாடானது சாட்சாத் கடவுளின் சத்தியவாக்கே. அன்றியும், ஒருவரோடொருவர் சம்பந்தப்படாத எதிர்க்கட்சிகளாயிருக்கிற யூதர்களும், கிறிஸ்தவர்களும் இவ்வாகமங்களுக்குக் காவலாளிகளாயிருக்கிறதும் அவற்றில் பிழை பிசகு புகும்படி இடம்பெறுதிருக்கிறது. இவர்கள் ஒருவருக்கொருவர் எதிரிகளானமையால், இவ்வேதங்களைத் திருத்துவதும் புரட்டுவதும் கூடாமையே. ஏதாயினும் ஒரு குற்றங்குறை ஏற்படுமாயின் எதிர்க்கட்சியார் அதை எடுத்துக்காட்டிக் கண்டிப்

friendly oversight, no error could have escaped detection; no negligence or infidelity have remained unrebuked. God in wisdom ordained, for the safe keeping and correct transmission of the Old Testament Scriptures, that they should thus be committed to the hands of two sets of warders.

பார்களே; அசாக்கிரதையினாலாகிலும், அசமந்தத்தினாலாகிலும் எந்த அறைகுறையும் நுழையவிடார்கள். இந்தப் பழைய ஏற்பாட்டாகமங்களைச் சுத்தமாயும் திருத்தமாயும் பாதுகாக்கும்படி ஞானசொரூபியாகிய கடவுள் அவற்றை எதிரிகளான இரண்டு காவலாளர் கையில் ஒப்புவித்து வைத்தது வியப்பாயிருக்கிறது.

## A NEW UPANISHAD.—நவ உபநிஷதம்.

### பத்தாம் காண்டம்.—10TH CHAPTER.

இந்தப்படியாக தர்மநகரத்து ஜமீன்தாராகிய ராமவர்மனும் அவன் மனையாள் லட்சுமியும் மஹாரிஷி புகட்டிவருகிற சத்தியமார்க்கத்தைச் சேரப்போகிற சமாசாரம் ஊரெங்கும் பிரசித்தமாய்விட்டது. ஆகவே ஏராளமான ஜனங்கள் ரிஷியின் வீட்டண்டை போய் அதைப் பார்க்கும்படியாய்க் கூட்டம் கூடினார்கள். அதை யறிந்தஉடனே ரிஷிபக்தர் தமது தியான அறையைவிட்டு ராமவர்மனையும் அவன் மனையாளையும் முற்றத்தண்டை அழைத்துவந்து சகலரும் அவர்கள் செய்யப்போகிறதைக் கண்ணாரக் காணும்படி உத்தேசித்தார். மீனாட்சியம்மாள் இந்தக் குறிப்பை அறிந்து உள்ளேயிருந்த புலித்தோலாசனத்தைத் தந்தையினிடம் கொண்டுவந்து விரித்தாள்; அவர் அதின்மேல் வீற்றிருந்தார். அப்பால் அவள் சத்தியவேதமாகிய திருநூலையும் கொண்டுவந்து அவரெதிரில் வைத்தாள். இதுகண்டு அவருடைய சீஷர்களும் அவ்விடம் சென்று அவர்முகமாய் உட்கார்ந்தார்கள். சிறிது நேரமானபிறகு மீனாட்சி லட்சுமியை அழைத்துக்கொண்டுவந்து ரிஷியின் வலப்பக்கத்தில் இருவரும் உட்கார்ந்தார்கள். ஊராரிற் சில பெரியோரும், ராமவர்மன் புத்திரராகிய ராமன் அர்ச்சுனன் என்ற இருவரும் முற்றத்துக்குச் சற்றே சமீபத்தில் வந்து உட்கார்ந்தார்கள். ரிஷியின் வலப்பக்கத்தில் ஒரு சிறியமேஜை வைத்திருந்தது; அதின்மேல் காவேரியின் சுத்தசலம் நிறைந்த ஒரு தாமிரபாத்திரம் வைத்திருந்தது. அந்தச் சலமானது ரிஷியின் வேண்டுகோளின்படி பீமராவு ஆற்றிலிருந்து கொண்டுவரப்பட்டது. இந்த எத்தனங்கள் யாவும் முடிந்தபிறகு ரிஷியானவர் எழுந்துநின்று, தமது சீஷரைத் தங்கள் ஆசனங்களில் இருக்கச்சொல்லி, எதிரே இருந்த கூட்டத்தைப் பார்த்துத் தமது வலதுகரத்தை உயர்த்தி "நமயெஹோவா" என்றார். மீனாட்சி, "ததாஸ்து" என்றாள். எனவே ரிஷிபக்தர் சபையாரை நோக்கி, "என தருமைச்சீஷர்களே, இங்கு வந்திருக்கும் சகலமான அன்பர்களே, உங்களுக்குத் தெரிந்திருக்கிறபடியே வெகுநாளாய் நான் என் சீஷாளுக்கு நவ உபநிஷத்தின் சத்தியங்களை உபதேசித்துவந்தேன். எல்லாரும் வழிபட்டு வணங்க வேண்டிய சாக்ஷாத் கடவுளானவர் ராமவர்மனுடைய மனதை உருகச்செய்து சத்தியத்தை அவன் கண்டு களிக்க கிருபையளித்திருக்கிறார். இந்தப் பேரருளால் அவன் சற்குருவாகிய இயேசு பெருமானுக்குச் சீஷனாய்விடத்தீர்மானித்திருக்கிறான். அன்றி, அவனும் என் குமாரத்தியும் சேர்ந்து அவன் பெண்சாதி லட்சுமிக்குச் சிலநாளாய் இவ்வுபதேசங்களைச் சொல்லிவர அவளும் தெய்வ கடாட்சத்தால் தன் நாயகனைப்போல மெய்யொளியடைந்து சத்தியமார்க்கத்தைச் சேரச் சித்தமாயிருக்கிறாள்.

"எம்பெருமான் இயேசுகிறிஸ்து விசுவாசித்து ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான் என்று வாக்கருளியிருக்கிறார். ராமவர்மனும் அவன் மனையாளும் இயேசுகிறிஸ்து தங்களைப் பாவத்திலிருந்து விடுவிக்கிற இரட்சகர் என்று விசுவாசிக்கிறார்கள். இந்த விசுவாசத்தின் பஹிரங்க அறிகுறியாக அவர்கள் இப்பொழுது இந்தத் தீட்சையடைய வந்திருக்கிறார்கள். ஆனால் ஞானஸ்நானம் செய்விக்கும்முன் அவர்களை நான் சில கேள்விகள் கேட்க விரும்புகிறேன்" என்றுரைத்து, அவர்கள் இருவரையும் எழுந்து நிற்கச்சொல்லிப் பின்வருமாறு வினவினார்:—

"1. ஆதியந்தமில்லாத அரூபியாயிருக்கிறவரும் சகலராலும் நமஸ்கரிக்கப்படத்தக்கவருமான ஒரே கடவுளை விசுவாசிக்கிறீர்களா?" என்றார். அவர்கள் "ஆம், விசுவாசிக்கிறோம்" என்றார்கள்.

"2. உலகத்தைப் பாவத்திலிருந்து விடுவிக்கவும், சத்தியமார்க்கத்தை வெளிப்படுத்தவும் உலகத்தில் எழுந்தருளிய தெய்வ அவதாரமும், சற்குருவுமாகிய இயேசுகிறிஸ்துவை விசுவாசிக்கிறீர்களா" என்றார். அவர்கள் "ஆம், விசுவாசிக்கிறோம்" என்றார்கள்.

"3. நம்மைப் பரிசுத்தராக்கவும் நம்மை தெய்வசித்தத்துக்கு இணங்கி நடக்கப்பண்ணவும் கர்த்தர் நமக்கு அருளியிருக்கும் பரிசுத்தஆவியை விசுவாசிக்கிறீர்களா?" என்றார். அவர்கள் "ஆம், விசுவாசிக்கிறோம்" என்றார்கள்.

"4. திருநூலானது தெய்வமே மனிதருக்கு அருளிய சத்தியவேதமென்று நம்புகிறீர்களா?" என்றார். அவர்கள் "ஆம்" என்றார்கள்.

"5. நீங்கள் பிறந்து வளர்ந்த அஞ்ஞானமதத்தை முற்றிலும் விட்டுவிட்டு இனி அதைக் கனவிலும் நாடீர்கள் என்று வாக்குக்கொடுக்கிறீர்களா" என்றார். அவர்கள் "ஆம்" என்றார்கள்.

"6. இனி தேவாவியின் சகாயத்தால் சத்தியவேதத்தின் போதனையின்படியே நீங்கள் தெய்வபக்தியாய்ச் சீவனம்பண்ணிவருவீர்களா" என, அவர்கள் "வருவோம்," என்றார்கள்.

இந்த வினாவிடைகள் முடிந்தபொழுது ரிஷியானவர் தமது வலதுகையால் மேஜையில் வைத்திருந்த செம்புப்பாத்திரத்துத் தண்ணீரைத் தொட்டுப் பின்பு அதை ராமவர்மன் சிரசில் வைத்து, "ராமவர்மா, பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தினால் உன்னை ஞானஸ்நானம் செய்விக்கிறேன்" என்றார். அதுபோலவே அவர் தமது கரத்தை மறுபடியும் சலத்திலிட்டு லட்சுமியையும் ஞானஸ்நானம் செய்வித்தார். இதின்பின் அவர், இரு கைகளையும் நீட்டி வானத்தை ஏறெடுத்துநோக்கி, "வானத்தையும் பூமியையும் படைத்த தெய்வமே, நீர் உம்மை எங்களுக்கு வெளிப்படுத்தினபடியால் உம்மை ஸ்துதிக்கிறோம்; நீர் சற்குருவாகிய இயேசுகிறிஸ்துவை இவ்வுலகத்துக்கனுப்பி எங்கள் பாவத்துக்காக அவர் தமது பிராணனைத் தியாகஞ்செய்யவும், சத்தியமார்க்கத்தை எங்களுக்குப் போதிக்கவும் செய்த உமது அளவற்ற அன்பின் நிமித்தமும் உம்மை ஸ்துதிக்கிறோம். இயேசுவின் சீவியமும், உபதேசங்களும் அடங்கிய சத்தியவேதத்தை எங்களுக்கு அருளியதற்காகவும் உம்மை ஸ்துதிக்கிறோம். மெய்ம்மார்க்கத்தை நாங்கள் அறிந்து பாவத்துக்காக உண்மையாய்த் துக்கிக்கச்செய்கிற உமது பரிசுத்தாவியாகிய பிரகாசிப்பிக்கிறவருக்காகவும் உம்மை ஸ்துதிக்கிறோம். ராமவர்மனும் அவர் மனைவி லட்சுமியும் தங்கள் பொய்ம்மதத்தை விட்டுத்தள்ளி உமது சத்தியமார்க்கத்தை அடையச்செய்ததற்காக உம்மைப் புகழ்ந்துகொள்ளுகிறோம். தங்கள் வாழ்நாளெல்லாம் இவர்கள் கிறிஸ்துவின் மார்க்கத்தின்படியே நடக்கவும், விரைவிலே அவர்கள் மக்களும் இந்த தர்மநகரத்தின் சகல சனங்களும் இந்த உமது மெய்ம்மதத்தைச் சேர்ந்து பாவத்திலிருந்து விடுதலையாகி, கடைசியில் மோட்சபதவி அடையும்படி அநுக்கிரகம் பண்ணியருளும். ராமவர்மனும் லட்சுமியும் இவ்வுலகத்தை விடுகையில் எந்நாளும் ஆனந்தம் வசிக்கின்ற உமது ராச்சியத்திற் அவர்களை ஏற்றுக்கொள்ளும். உமது குமாரனும் எங்கள் சற்குருவுமாகிய கிறிஸ்துவை முன்னிட்டு இதை வேண்டிக்கொள்ளுகிறோம். ஆமென்," என்றார்.

அதின்பின்பு ரிஷிபக்தர் தமது சீஷர்களாகிய பீமராவு கோபால்நாயுடு என்பவர்களையும் அங்கு கூடியிருந்த மற்றவர்களையும் ராமவர்மனும் அவன் மனையாளும் நடந்துகொண்டதுபோல நடந்துகொள்ளும்படி அன்பாய்ப் புத்திசொல்லிப் பின்னும் அவர்களைப்பார்த்து, "தக்ஷணமே தீர்மானம் செய்துகொள்ளுங்கள். மரணவெள்ளம் திடீரெனப் பிரவாகித்துவந்து உங்களை ஒன்று மோட்சத்துக்காகிலும் ஒன்று நரகத்துக்காகிலும் வாரிக்கொண்டு போய்விடும். இன்றிரவில் மரணம் உங்களுக்கு நேரிடுமாயின், நாளை நீங்கள் எங்கே இருப்பீர்கள்? மோட்சத்திலா நரகத்திலா? ஓ சனங்களே, உங்கள் முடிவைக் கவனியுங்கள்; மனந்திரும்பி ஞானஸ்நானம் பெற்றுக்கொள்ளுங்கள். இயேசு உங்களை இரட்சிக்கச் சித்தமாயிருக்கிறார்; அவர் அருளும் இரட்சிப்பைப் பெற்றுக்கொள்ளமாட்டீர்களா?" என்று அதிக கரிசனமாய்ச் சொல்லி முடித்தார். அப்பால் அவர்தாமே இயற்றிய ஒரு பாட்டைப் பாடினார்கள். அதாவது:—

1. நான் இவ்வுலகத்தில் பரதேசி தான்.
நான் இவ்வுலகத்தில் பரதேசி தான்.
நான் இவ்வுலகத்தில் பரதேசி தான்.
மோட்சம் போகிறேன்.

பல்லவி.
ஸ்துதி ஸ்துதி அல்லேலூயா,
ஸ்துதி ஸ்துதி அல்லேலூயா,
ஸ்துதி ஸ்துதி அல்லேலூயா,
மோட்சம் போகிறேன்.



2. நான் இம்மையிலே துன்பப்படுகிறேன்
மறுமை இன்பம்
ஸ்துதி—மோட்சம் போகிறேன்.

3. ஏசுஎன்ரக்ஷகர் முன்னே போயினார்
நானும் போகிறேன்
ஸ்துதி—மோட்சம் போகிறேன்.

4. ஓரிடம் எனக்கு ஆயத்தம் பண்ணினார்
இன்ப லோகத்தில்
ஸ்துதி—மோட்சம் போகிறேன்.

5. அங்கே சஞ்சலம் கண்ணீர் இல்லையே
யாவும் பாக்கியம்
ஸ்துதி—மோட்சம் போகிறேன்.

6. நீங்க ளெல்லாரும் என்னோடே வாருங்கள்
கூடிச் செல்லு வோம்
ஸ்துதி—மோட்சம் போகிறேன்.

7. இன்று பொன் வாசல் திறந்திருக்குது
உள்ளே சேருங்கள்
ஸ்துதி—மோட்சம் போகிறேன்.

8. தாமதித்து சாக்கு போக்குச் சொல்லாதே
மோசம் வருமே
ஸ்துதி—மோட்சம் போகிறேன்.

இந்தப் பாட்டைப்பாடியானபின்பு ராமவர்மன் எழுந்துநின்று மலர்ந்த முகத்துடன் தான் கிறிஸ்துவின் சீஷனானதால் தனக்கு உண்டான சந்தோஷத்தைச்சபையாருக்குவெளிப்படுத்தி "என் பாவங்கள் எல்லாம் மன்னிக்கப்பட்டனவென்றும், நான் இப்பொழுது கடவுளின் பிள்ளையென்றும், மோட்சம் என் வீடென்றும் நிச்சயித்துக்கொள்ளுகிறேன். இனி இரவும் பகலும் நான் ஆனந்தமடைந்து பாட்டைப்பாடுவேன். ஸ்தோத்திரம், ஸ்தோத்திரம் அல்லேலூயா, மோட்சம் என் வீடு" என்றான். அவ்வாறே லட்சுமியும் "என் அறிக்கையும் இதுவே" என, மீனாட்சி, "கர்த்தருக்குப் புகழ்ச்சியுண்டாக" என்றாள். அதுகேட்டு ராமவர்மனும் லட்சுமியும் ஏகோபித்து ஒரு குரலாய், "ஆம் ஆம், கடவுளுக்கு ஸ்தோத்திரம் உண்டாக" என்றார்கள். பின்பு லட்சுமி ரிஷியைப்பார்த்து "ஓ ரிஷிபக்தரே, எங்கள் அருமைக்குமாரரும் எங்களைப் பின்செல்லும்படிப் பிரார்த்தியுங்கள். அவர்கள் இப்பொழுது நரகபாதையில் இருக்கிறார்களே. ஆண்டவரே அவர்களை இரட்சியும்" என, ரிஷியானவர், "அவர்களுக்காக நான் இடைவிடாமல் செபம் பண்ணிவருவேன். கடவுள் நம்முடைய செபங்களைக் கேட்டு அவர்களையும் சத்தியமார்க்கத்துக்கு அழைத்துக்கொள்ளுவார் என்று உறுதியாயிருக்கிறேன்" என, லட்சுமி பின்னும் அவரைப்பார்த்து, "என் மக்கள் இருவரும் சத்தியமார்க்கத்திற் பிரவேசிக்கப் பார்ப்பேனானால் நான் சந்தோஷமாய் மரிப்பேன்" என்றாள். அதுகேட்டு ரிஷியானவர் ஆசீர்வாதத்தைக் கூறி ஆராதனையை முடித்தார்.

## ANSWERS TO OBJECTIONS.—சந்தேக நிவிர்த்தி.

### "பாதிரிகள் செய்யும் அக்கிரமம்."

இம்மாதத்து **விஜயத்துவஜத்தில்** ஒருவர் "பாதிரிகள் செய்யும் அக்கிரமம்" என்று தலைப்புவைத்துப் பொய்யான பல விஷயங்களை எழுதியிருக்கிறார். பாதிரிமார் இந்துமதத்தைத் தூஷிக்கிறதாகவும், இந்துக்களைப் "பிசாசை வணங்குகிறவர்கள்" என்றும் "பிணத்தைத் தூக்கிக்கொண்டு போகிறவர்கள்" என்றும் பலவாறாகத் தூஷித்து வருகிறதாய்க் குற்றஞ்சாட்டுகிறதுமன்றி, பினல் கோ(ர்)டின் பிரகாரம் அவர்களைத் தண்டிப்பிக்க வேண்டுமென்றும் வற்புறுத்துகின்றார். அவ்வாறே செயல்வேண்டும். பொதுப்பட வாயில் வந்ததைச் சொல்லாமல், இன்ன இடத்தில் இன்ன சமயத்தில் இன்ன பாதிரியார் இன்னபடி இன்னாரறிய எங்களையும் எங்கள் மதத்தையும் அவதூறுசெய்தார் என்று திட்ப நுட்பமாய்க் கூறிப்பிரியாது செய்வதே உத்தமம். சில காலத்துக்குமுன்பு கிறிஸ்துமதத்தையும் கிறிஸ்தவர்களையும் தூஷித்த சிலரைப் போலிஸ் கோர்ட்டாரைக்கொண்டு தண்டிப்பித்தது யாவருக்கும் தெரிந்த விஷயமே. துரைத்தனத்தாருக்குப் பட்சபாதம் என்பதேயில்லை என்று எமதன்பர்தாமே கூறுவதால் தடையின்றித் தாமதமின்றி வியாஜ்ஜியம் தொடுக்கலாமே. யாவராயினும் தூஷித்தல் தாமமன்று. ஆனால் யாமறிந்தபடி பாதிரிகள் தூஷிக்கக் கேட்டதில்லை. தூஷித்தல் அவர்கள் தொழிலன்று.

## IMITATION OF CHRIST.—சற்குரு சேவை.

### 9-ம் பர்வம்.

#### அடக்க ஒடுக்கம்.

மனம்போன போக்காய்ப் போகாமல், உத்தமர் ஒருவருக்கடங்கி, அவருடைய சொற்படி நடத்தலே சிறப்பு.

ஆள்வதைவிட அடங்குவதே சுகம்.

அன்பினாலன்றி அவசியத்தினாலே அனேகர் அதிகாரத்துக்குட்படுகிறார்கள். அதினால் அதிருப்தியும் முறுமுறுப்பும் உண்டாகிறது. ஒருவன் தெய்வத்தைப்பற்றிய அன்பின்பொருட்டுப் பூரண மனோற்சாகமாய் ஒருவர் கட்டளைக் குட்பட்டால் தான், அவனுக்கு மனோசுவாதீனமுண்டாகும்.

நீ எவ்விடஞ் சென்றாலும், உத்தமர் ஒருவரின் ஆக்கினைக்கு அடங்கியிருந்தாலன்றி உனக்கு ஆறுதல் இராது. மனோ பாவனையினாலும் ஸ்தல பேதத்தினாலும் அனேகர் ஏமாறியிருக்கிறார்கள்.

ii. ஒவ்வொருவனும் தன்றன் புத்திக்கேற்றதைச் செய்ய விரும்புகிறதும் தனக்கொப்பான மனத்தோரை நாடுவதும் உண்மையே.

ஆனால் கடவுள் நம்மிடம் இருப்பாராயின், சமாதானத்தின் நிமித்தம் நாம் சிலவேளைகளிலே நம்முடைய சொந்த அபிப்பிராயப்படி நடக்கலாகாது.

சகலத்தையும் குறையற அறிந்த ஞானியும் உண்டோ? உன் சொந்த அபிப்பிராயமே சரி என்று நம்பியிராதே; பிறர் புத்தியையும் கேட்க விரும்பு.

நீநினைத்தது பிசகாயிராவிட்டாலும், அதை ஆண்டவருக்காக விட்டுவிட்டு இன்னொருவனுடைய அபிப்பிராயத்தை நிறைவேற்றுவாயானால், அது உனக்கு நன்மையாகவே முடியும்.

iii. புத்தி சொல்லுகிறதைவிட புத்தி கேட்கிறதே சுகமென்பார்கள்.

ஒருவனுடைய அபிப்பிராயமானது உசிதமாயிருந்தாலும், யாதொரு காரணத்தையிட்டுப் பிறருடைய அபிப்பிராயத்துக்கு இணங்காதிருப்பது அகந்தைக்கும் முரட்டுத்தனத்துக்கும் அறிகுறியாம்.

### 10-ம் பர்வம்.

#### வீண் வார்த்தையாடல்.

உன்னாலியன்றமட்டும் பிரபஞ்ச குழப்பத்தை விட்டோடிப்போ; உலக விஷயங்களை உண்மையாய் எடுத்துப்பேசுவதும் பெருந்தடையாயிருக்கும். மத். 4: 1; 14: 23. யோவா. 6: 15. ஏனெனில்,

நாம் விரைவிலே கறைப்பட்டு, மாய்கையிலே சிக்குண்டு போகிறவர்கள்.

நான் ஒரு சபையிலே போய்ப்பேசாமல் சும்மாவிருந்திருப்பேனானால் நலம் என்று அடிக்கடி நினைத்திருக்கிறேன்.

நாம் ஒருவரோடொருவர் பேசவும் வார்த்தையாடவும் அத்தனையாய் விரும்புவானேன்? குற்றமுற்றவர்களாகவே நாம் நமது பேச்சை நிறுத்துகிறோம் அல்லவா? மத். 7. 1. ரோ. 2. 1.

நாம் ஒருவரோடொருவர் சம்பாஷிக்கிறதால் ஆறுதலடைந்து, பற்பல எண்ணங்களும் கவலைகளும் நிறைந்த நமது மனம்தன்பாரத்தை இறக்கிக்கொள்ளுகிறபடியால், நாம் வார்த்தையாட விரும்புகிறோம்.

ஆதலால் நாம் அதிகமாய் விரும்பி நேசிக்கிற விஷயங்களைக் குறித்தாவது, நமக்கு அதிக வெறுப்பும் விரோதமுமாயிருக்கிற விஷயங்களைக்குறித்தாவது நாம் பேசவும் நினைக்கவும் விரும்புகிறோம்.

ii. ஆனாலும், ஐயையோ, இந்தச் சம்பாஷணைகள் பலமுறையும் வியர்த்தமாய் முடிகிறது.

புறம்பான ஆறுதலுக்காக நாம் உள்ளான திவ்விய ஆறுதலை இழந்து பெரும் நஷ்டமடைகிறோம்.

ஆகையால் நம்முடைய நேரம் வீணேகழியாவண்ணம் நாம் விழித்துச் செபம் பண்ணவேண்டும்.

நீ பேசவேண்டியது நியாயமும் நன்மையும் என்றுனக்குத் தோன்றினால், விஸ்வாச பலத்துக்குரியவைகளைக்குறித்து வார்த்தையாடு. நம்முடைய சுயநன்மையைக்கருதாத துர்வழக்கத்தினால் நாம்பயனற்ற வீண்பேச்சுப் பேச ஏவப்படுகிறோம்.

ஆகிலும், கர்த்தர் முன்னிலையில் ஒரே மனமும் ஆவியுமுள்ள பேர்கள் கூடி ஞான காரியங்களை எடுத்துப் பேசுகிறதினால், நம்முடைய பக்தி பெருகிப் பலப்பட ஏதுவுண்டாகும்.

## NEWS AND NOTES.—வர்த்தமானக்குறிப்புகள்.

**அதிசய யந்திரம்.**—பெருக்கல் முதலான கணக்குகளைத் தானய்ச் செய்துவருகிற ஒரு யந்திரத்தை ஒருவர் உண்டுபண்ணியிருக்கிறார்.

**பாம்புக்கடிக்கு மருந்து.**-இதைக் கண்டுபிடிக்கும்படியாக ஒரு பங்காள சுதேசி கல்கத்தாவில் ஒரு சீவ சோதனைக்கூட்டம் ஏற்படுத்தியிருக்கிறார்.

**அதிக ஓட்டம் ஆகாது.**—ஒரு சிறுவன் ஒரே மூச்சாய்ப் பந்தயத்துக்கு 4 மைல் தூரம் ஓடியும் அது ஒழிந்த உடன் கீழே விழுந்து பிராணனை விட்டுவிட்டானும்.

**பூமி அதிர்ச்சி.**—சென்ற நவம்பர்மீ 8உ செவ்வாய்க்கிழமை இரவு 7 மணிக்கு இலங்கைத்தீவின் பற்பல இடங்களிலே பயங்கரமான பூமி அதிர்ச்சி உண்டாயிற்றும்.

**கலெக்ட்டர் கேஸ்.**—கலெக்ட்டர் ராமச்சந்திரராவென்பவர் லஞ்சம் வாங்கினதாக இப்பொழுது அவர்பேரில் கவர்ன்மென்டார்தாமே வியாஜ்யம் தொடுத்திருக்கிறார்கள்.

**பொன் சுரங்கம்.** — அமெரிக்காவிலே எக்வடார் என்றொரு தேசத்தில் இப்பொழுது ஏராளமான பொன் எடுத்து வருகிறார்கள். இதினாலாகிலும் சாவரேன் விலை குறையுமோ?

**புகைவண்டி யந்திரங்கள்.**—உலகத்திலுள்ள புகைவண்டி யந்திரங்களின் மொத்த தொகை லட்சத்து ஒன்பதினாயிரமாம். இந்த யந்திரங்கள் முதல்முதல் உற்பத்தியான இங்கிலாந்திலே 17,000 உண்டாம்.

**ஆப்கானிஸ்தான்.**—இந்தத் துலுக்க ராச்சியம் இந்திய துரைத்தனத்தாருக்கு எக்காலமும் தொந்தரவு செய்துகொண்டு வருகிறது. ஒருவேளை அதின் அரசன் அமீர்ஆலியுடன் யுத்தம் நடந்தாலும் நடக்கும்.

**சிக்காகோவும் மைசூர் அரசும்.**—வருகிற வருஷம் சிக்காகோவிலே நடக்கப்போகிற அதிசயக்காட்சியிலே மைசூர் ராஜ்யத்திலிருந்த சந்தனமரத்தில் சிறந்த சித்திரவேலைதீர்ந்த நேர்த்தியான ஒரு கதவும் சட்டமும் அவ்விடம் போகிறதாம்.

**காற்றைச் சோதிக்கும் யந்திரம்.**—காற்று மெத்த சுத்தமென்று நினைக்கிறோம். ஆனால் அதிலுள்ள அழுக்குக்கும், தூசிக்கும் அளவில்லை. இதுகளைப் பிரமாணப்படுத்தி வெளிப்படுத்துகிற ஒரு யந்திரத்தை இப்பொழுது ஒருவர் உண்டுபண்ணியிருக்கிறார்.

**பெண்கள் ஆஸ்பத்திரி.**—கிறிஸ்துமத உதாரத்தால் பெண்களுக்கென்றொரு ஆஸ்பத்திரி பந்தரிலே கட்டப்போகிறார்கள். அதிலே 50 பேருககுப் படுக்கைகள் இருக்கும். ஒரு அமெரிக்க ஸ்திரீ வைத்தியர் இதற்காக அதிக பிரயாசை எடுத்துக்கொள்ளுகிறார்கள்.

**திருப்பதி மஹந்து.**—பழைய மஹந்து பணம் அபகரித்துப் பதினெண்மாதம் கடுஞ்சிறையிற் கிடந்தனர். இப்பொழுது மஹந்தாயிருப்பவர் பெண்ணை அபகரித்து அவள் நாயகன் நரசிம்மாசாரியால் கோர்ட்டிலே வியாஜ்யந் தொடுக்கப்பட்டுக் கிடக்கிறார்.

**கவர்னரவர்களின் உதாரத்துவம்.**—இதுவரையும் அங்கிலேயர்மட்டும் அனுபவித்துவந்த "சால்ட்டு டெப்யுட்டி கமிஷனர்" என்னும் உயர்ந்த உத்தியோகம் ஒன்றை நமது கவர்னரவர்கள் தர்மராவுநாயுடு என்னும் ஒரு சுதேசிக்கு அளித்திருக்கிறார். இது தர்மமே.

**பூர்வ மிருகம்.**—தென் ஆப்பிரிக்காவிலே பூர்வ மிருகம் ஒன்றின் எலும்புக்கூடு கண்டுபிடிக்கப்பட்டது. அது எட்டடி நீட்சியும், முதலை நடையும், தவளை மூஞ்சியும் உடையதாயிருந்திருக்கும் என்று சாஸ்திரிகள் உத்தேசிக்கிறார்கள். அது போன்ற பிராணி இப்பொழுது உலகத்தில் இல்லை.

**காலங்காட்டும் கல்.** — பின்லண்டென்னும் ஓர் வடதேசத்தில் ஒருவிதமான கல் உண்டு. அது காலவித்தியாசத்தைக் காட்டும் இயல்புள்ளதாம். அதின் பெயர் "சிமக்குயிர்." மழை வருமுன் அது கறுத்த நிறமாகவும், மழையில்லாமல் நல்ல வெயில் காயுமானால் அது வெளுத்த நிறமாகவும் காண்கிறதாம்.

**பெரிய பூதக்கண்ணாடி.**—பிரான்சுதேசத்தில் 1,900–ம்வூ நடக்கப்போகிற விநோதகாட்சியிலே காண்பிக்கும்படி 132 அடி நீளமும், கண்ணாடி 9 அடி விஸ்தாரமுமுள்ள ஒரு பிரமாண்ட நச்சுக்குழாய் உண்டுபண்ணப்போகிறார்கள். அதிலே இதுவரையும் காணாத விண்ணதிசயங்களைக் காணலாமென்பதற்கு ஐயமில்லை.

**வியாழன்.**—வியாழன் என்னும் கிரகத்துக்கு நான்கு சந்திரன் உண்டென யாவருக்கும் தெரியும். இப்பொழுது ஒரு அமெரிக்க வானசாஸ்திரியானவர் ஐந்தாம் சந்திரன் ஒன்றைக் கண்டுபிடித்திருக்கிறார். வியாழன் பூமிக்கு ஆயிரமடங்கு பெரிதானமையால் அதற்கு இராக்காலத்தில் ஐந்து சந்திரன் தேவையாயிருக்கிறது.

**சென்னை-பெஸ்வாடா ரெயில்வேய்.**—இந்த ரெயில்வேயை இப்பொழுது ஆரம்பிக்க முடியாதென்று பிரதிநிதியார் அறிவித்துப் போய்விட்டார். இது விசனகரமான செய்தி. கத்திவாக்கம் வரைக்குமாகிலும் உத்தரவு செய்யவேண்டுமென்று சென்னை ரெயில்வே கம்பெனியார் விண்ணப்பஞ் செய்திருக்கிறார்கள்.

**பெண்கள் பிரதிக்கினை.**—மெல்பர்ன் என்னும் ஒரு பட்டணத்தைச்சேர்ந்த சில பெண்கள் ஒரு சங்கம் ஏற்படுத்தியிருக்கிறார்கள். அவர்கள் செய்துகொள்ளும் பிரதிக்கினையாவது: ஒருவரைப்பற்றியும் நாங்கள் தீதாய்ப் பேசாமலிருக்கவும், ஒவ்வொருதினமும் ஏதாகிலும் ஒரு நற்காரியம் செய்துவரவும் வாக்கு செய்கிறோம் என்பதே.

**கரடி வளர்த்த பெண்.**—கரடியால் பாலூட்டி வளர்க்கப்பட்டு அதினிடத்திற் கிடந்த ஒரு பெண்குழந்தையை இப்பொழுது கல்கத்தாவிலுள்ள பிரம சமாஜத்தார் வளர்த்துவருகிறார்கள்; அது மூன்றுவயதானாலும் இன்னும் ஒரு வார்த்தையும் பேசாமல், சீறுகிறதும் கீறுகிறதுமாயிருக்கிறதாம். மனுஷகுலமாயிருந்தாலும் போஜன பேதம் ஒருவனை மிருகக்குலமாக்கிவிடும்.

**படிகாரப் பிரயோகம்.**—படிகாரத்துக்குப் பல குணங்கள் இருந்தாலும் கண்ணுக்குப் புலப்படாத அணுவுக்கணுவான அற்பகிருமிகளைக் கொல்லுகிற சக்தியுமதற்குண்டாம். பிரயாணிகள் தாகத்துக்குச் சாப்பிடுமுன் படிகாரத்தூளில் கொஞ்சம்மாத்திரம் சலத்தில் விட்டுச் சாப்பிடுவார்களாகில் அதிலிருக்கிற பூச்சிகள் அனைத்தும் அழிந்துவிடும். ஒரு காலனுக்கு எட்டு கிரேய்ன் போதுமாம். இந்த அளவில் சலமானது சுவை மாறாது.

**மழை விவரம்.**—இந்த நாலுவருஷக்காலமாய் ஆண்டவர் இந்நாட்டை அனாவிருஷ்டியினால் உபத்திரவப்படுத்திவருகிறார். நவம்பர்மீ முழுதும் சிறிதேனும் மழையில்லை. குளங்களும் ஏரிகளும் வற்றிக்கிடக்க, பயிர்கள் எல்லாம் உலர்ந்து போயின. கொள்ளு, சிறுமணிவிலையாய் விற்கிறது. வருகிற வருஷம் என்னமாயிருக்குமோ ஆண்டவனுக்குத்தான் தெரியும். ஆனால் ஒன்று, பிரசைகள் தங்கள் அக்கிரமங்களை நினைத்துத் துக்கித்துப் பரிசுத்தமாகப் பார்க்கவேண்டும்.

**ஒரு ஹிந்துவின் சாட்சி.** — ஒரு பாதிரியார் ஒரு ஹிந்துவைப் பார்த்து "நாங்கள் செய்துவருகிற முயற்சிகளில் எது உங்களுக்கு அதிக பயமாயிருக்கிறது" என்று கேட்க, அவ்விந்து சினேகிதர், "உங்கள் பள்ளிக்கூடங்களைப்பற்றியாவது, உங்கள் புஸ்தகங்களைப்பற்றியாவது, உங்கள் பிரசங்கத்தைப்பற்றியாவது எங்களுக்கு யாதொரு பயமுமில்லை. உங்கள் டாக்ட்டர்மார்களையும், உங்கள் ஸ்திரீகளையும்தான் நாங்கள் அதிகமாய் அஞ்சுகிறோம். உங்கள் டாக்ட்டர்கள் எங்கள் மனதையும், உங்கள் ஸ்திரீகள் எங்கள் வீட்டாரையும் கவர்ந்துகொள்ளுகிறார்கள்" என்றார்.

**சுரத்தை விலக்கு மருந்து.**—குயினான் என்கிற அதிக கசப்பான வெண் பஷ்பமானது சுரத்தை விலக்கும் சிறந்த சக்தியுள்ளதென்று சுதேசிகள் யாவரும் அறிந்துகொள்ளவேண்டியதுமல்லாமல், இந்தப் பரமௌஷதத்தை இடைவிடாமல் கையாடிவரவேண்டும். முதல் கண்ட சுரம் விட்டஉடனே தக்க அளவு குயினான் சாப்பிடவேண்டும். வீட்டிலே எப்பொழுதும் கொஞ்சம் வைத்திருக்கிறது உத்தமம். வயதுக்குத் தக்கபடி கால்ரூபாய் முதல் அரைரூபாய் மட்டும் மூடத்தக்க குயினானைச் சாப்பிடவேண்டும். இப்படி சிலநாள் சாப்பிட்டுவந்தால் காது மந்தம் கொஞ்சம் உண்டாகும்; ஆனால் அதை லட்சியம் பண்ணக்கூடாது.

***புதுப்புஸ்தகங்கள்.** — (1)**மதுரை மீனாட்சி அம்மன் சரித்திரம்.**—இதிலே மதுரையில் எழுந்தருளியிருக்கும் மீனாட்சியம்மனின் பிறப்பு வரலாறு, அரசு, கலியாணம், அரசாட்சி முதலியவற்றைக் கூறி யதார்த்தத்தை நிறுத்தியிருக்கிறது. இதின் விலை, 1 அணா. (2)**சிலுவைப் பிராணத்தியாகப் புலம்பல்.** இந்நூல் இயேசு பெருமானின் மரணத்தை நூறு பாடலாக இயற்றியிருக்கிறது. இதின் விலை, 4 பை. (3) **மதுவிலக்கு வினாவிடை.** — மதுபானத்தை விலக்கச்செய்கிற இச்சல்லாப நூலின் விலை, 3 பை. (4) **கீர்த்திபெற்ற வைரமணி.**—சத்தியவேதமாகிய சுத்த வைரத்தை விவரித்தது. இதின் விலை. 1 பை.

* All orders to be sent to Mr. A. T. Scott, Tract Depôt, Madras. Re. 1 for 200 Copies. Postage extra at ½ anna for 10 copies.

All contributions intended for publication to be sent to the Rev. J. Lazarus, B.A., Vepery, Madras.

Printed at the S. P. C. K. Press, Vepery—1892.

